ளில் உட்புகுந்துழலாமல், குடித்தன விஷயங்களில் தன் புருஷனுக்கு உற்ற துணையாயிருந்து, தன்னுடைய தயாளகுணத்தாலும் நன்மையாலும் எல்லாருக்கும் இனியவள் என்று பேரெடுத்து, அனைவராலும் மெய்ச்சப்பட்டு வந்தாள்.

இந்நங்கை 1629-ம் வருஷத்தில் மரணமடைந்தாள். தான் இனிமேல் ஜீவிக்கப் போகிறதில்லையென்று கண்டு தன் புருஷனை அருகே அழைத்து அவனைநோக்கி, "என் பிராணநாயகரே, நான் உம்மைவிட்டுப் போகும்காலம் வந்துவிட்டது. என் பிராணன் போகுமுன் நான் தங்களைக்கேட்டுப் பெற விரும்பும் வரம் இரண்டுள்ளது. ஒன்று, தாங்கள் எனக்குப் பிற்காலம் இரண்டாம்தரம் விவாகம் செய்துகொள்ளாமல் இருப்பது, மற்றொன்று, என் பெயர் அழியாமல் என்றென்றும் நிலைநிற்கும்படி என் பெயராலே ஒரு அழகிய கோரியைக்கட்டுவித்து அதில் என்னை அடக்கம்செய்வது. இவ்விரண்டு வரங்களையும் எனக்குக்கொடுத்தருளவேண்டும்" என்றாள். ஷாஜிஹானும் அவ்வாறே வாக்களித்து அவ்விரண்டு கோரிக்கைகளையும் நிறைவேற்றினான். "ஆன்மாவுக்குத் தலைவன் ஈச்வரன் ஒருவனேபோலவும், சூரியனுக்குத் துணைவன் சந்திரன் ஒருவனேபோலவும், ஷாஜிஹானுக்குப் பிராணநாயகி மம்தாஜ்மஹால் ஒருவளே" என்று புனர்விவாகம் செய்யாமல் ஒழிந்திருந்தான்.

அவன் தனக்குத் துபரம் சிறிது ஆறினபின்பு, தான் தன்மனைவிக்குக் கொடுத்த வாக்குப்படியே சமாதியைக் கட்டுவிக்க ஆரம்பித்து முன்னெக்காலத்திலும் இல்லாததும் இப்பரதக்கண்டத்தில் உள்ள கட்டிடங்கள் எல்லாவற்றிலும் அழகுமிகுந்ததுமான ஒரு அதியற்புதமான கோரிமண்டபத்தைக் கட்டுவித்தான். இது அதிமனோகரமாகச் சித்திரிக்கப்பட்ட வெண்சலவைக் கற்களால் நிருமிக்கப்பட்டு, ரத்நகஜிதமான புஷ்பங்களால் அலங்கரிக்கப்பட்ட சுவர்களையும் உடையது. இது கட்டபட்டு எவ்வளவோகாலமாகியும் எள்ளளவேனும் அழகும் ஒளியும் குலையாமல் நேற்றுத்தான் கட்டப்பட்டதுபோல மனோரஞ்சிதமாகக் காணப்படுகின்றது. இதைக்கட்டுவதற்கு இருபதினாயிரம் ஜனங்கள் பதினேழுவருஷம் இடைவிடாமல் வேலைசெய்தார்களென்றும், இதை முடிப்பதற்கு மூன்று கோடி ரூபாய் செலவாயிற்றென்றும் சொல்லுகிறார்கள். இச்சமாதிமண்டபத்தில் தானே ஷாஜிஹானும் பின்பு அடக்கம் செய்யப்பட்டான். இவ்விருவர் சமாதியின்மேல் எப்போதும் தீபம்போட்டுப் புஷ்பமாலைகளும் சாற்றப்பட்டுவருகின்றன.

இது இத்தேசத்திலுள்ளகட்டடங்களெல்லாவற்றிலும் மிக அழகாயிருத்தலினாலே இத்தேசத்துக்கு விநோதார்த்தமாகவோ வேறுகாரியமாகவோ வந்துபோகும் தேசாந்தரிகள் எவர்களும் இதனைப்பாராமற் போகார்கள். இதைச் "சலவைக்கல்லால் அமைத்த கனாக்காட்சி" யென்று இதன் அழகைப் புகழ்ந்துகூறுவார்கள். அதாவது இதைப்போலும் மண்டபமொன்று சொற்பனத்திற் கண்டாற் காணலாமேயன்றிப் பிரத்தியக்ஷத்தில் காணமுடியாதென்பது இதன்பொருள். ஒருதரம் காணிற் பின்னென்றும் மறவாத முக்கியமான பொருள்களில் இதுவும் ஒன்று. இதை உலகிலுள்ள மண்டபங்கள் எல்லாவற்றிலும் சிறந்ததென்று பற்பல அருமையான காட்சிகளைக் கண்டவர்களும் சொல்லுகிறார்கள். இது அதியற்புதமான மகாசத்தியையுடையவரால் கருதிப்பாவிக்கப்பட்டு இரத்தினவேலைகளில் வல்லசிற்பிகளால் செய்துமுடிக்கப்பட்டதென்றும் இதன் பெருமையை வியப்பார்கள். அன்றியும் இது இந்தியாவின் சிரோரத்நமென்றும் கொண்டாடப்படும். இதற்கிணையானது இப்பூமண்டலத்தில் இல்லை.

## SHORT STORY.

### ALL IS WELL THAT ENDS WELL.

### சிறுகதை.

### நன்றாய் முடியின் எல்லாம் நன்றே.

நீராவியந்திரம் "சீத், சீத்" என்று சீறி ஆரவாரிக்கவும், சக்கரங்கள் தண்டவாளத்தின்மேல் தேய்ந்து "கிருக்-கிருக்" என்று சப்திக்கவும், தென் இந்தியாவின் முக்கியபட்டணங்களில் ஒன்றில் மாலை சுமார் ஐந்தரை மணிவேளையில் ஒரு புகைவண்டித்தொடர் வந்து நின்றது. உடனே ஏறுவோரும், இறங்குவோருமாய் குழப்ப மதிகரிக்க, ஒரு மூன்றாவது வகுப்பினறையிலிருந்து, ஒரு யௌவன புருஷன் கீழே இறங்கினான்.

அவனுக்கு வயது சுமார் இருபத்திமூன்று இருக்கலாம். அவனுடைய உயர்ந்த வடிவையும் அகன்ற மார்பினையும் விசாலமான நெற்றியையும் நுனியில் வளைந்த மூக்கையும் உற்றுப் பார்க்குங்கால் சிறப்பும் ஆண்மையும் நிறைந்த செல்வனென்றே அவனைக் கூறவேண்டும். ஆனால் அவனுடைய ஒட்டின கன்னங்களும் ஒளியற்று ஆழ்ந்திருந்த கண்களும் அவன் தீராத்துயரத்துக்கும் இடைவிடாத தீர்க்காலோசனைக்கும் இரையானவனென்றும் நிரூபித்தன. அவன் நடையையும் யாவரையும மகிழச்செய்யும் பாவனங்களையும் * யோசித்துப் பார்க்கும்பொழுது அவன் தன் துயரங்களைவென்று தனக்கொரு பெயரையும் உண்டாக்கிக்கொள்ளக்கூடிய திறமையையு மடைந்திருந்தானென்பது புலப்பட்டது. மேலும் அவனுடைய முழங்கைகளிற் கிழிந்த சட்டையும், அழுக்குப்படிந்த உள்ளங்கியும், வலை போன்ற சீமையங்கவஸ்திரங்களும், அவன் தரித்திர சாகரத்தில் அவஸ்தைப்பட்டுக்கொண்டிருந்தானென்று வெளிப்படுத்தின.

வண்டியை விட்டிறங்கினதும் தன் பிரயாணச் சீட்டைக்கொடுத்துவிட்டு வெளியே வந்து நின்று "நடந்து போகிறதா, வண்டியில் போகிறதா" என்று ஆலோசிக்கும்பொழுது ஒரு மாட்டுவண்டி வந்து நின்றது. அதிலிருந்து இரண்டுபேரிறங்கினார்கள். அப்பொழுதுதான் சாந்திமுகூர்த்தம் செய்துக்கொண்ட தம்பதிகள்போல் காணப்பட்டார்கள். அவர்களிலகமுடையாள் வெட்கத்தினால் தன் கணவனருகில் போகாமலும், பயத்தினால் அவனைவிட்டுப் பிரிந்து போகாமலும் புன்சிரிப்புடன் தன் புருஷனைத் தொடர்ந்து வண்டியேறச் சென்றதைப் பார்த்து "ஆஹா இவர்கள் ஒருவருடனொருவர் கஷ்ட நிஷ்டூரங்களைச் சொல்லிக்கொண்டு ஆறுதலுந் தேறுதலு மடைந்து இனிமேலனுபவிக்கப் போகிற ஒப்பற்ற சுகத்தை நானென்றைக்கு அடையப் போகிறேன்" என்கிற தன் பரிதாபமான எண்ணத்தைப் பெருமூச்சினால் தெரிவித்துத் தன் வழி நடக்க ஆரம்பித்தான்.

புகைவண்டி உத்தியோகஸ்தர்களும் வேலைக்காரர்களுமிருக்கும் கட்டடங்களையும் குடிசைகளையும் கடந்து சென்ற பிற்பாடு இடையிலிருக்கும் ஒரு திறந்தவெளியில் வந்துசேர்ந்தான். அப்பொழுது மேற்கே நிமிர்ந்து கவனித்துப் பார்த்தான். சிவந்த தினகரன் மலையின் வாயில் விழுந்து அஸ்தமானமாயிருந்தபோதிலும் அவனுடைய கிரணங்கள் ஸ்தம்பம் ஸ்தம்பங்களாக மேலே பரவி வியாபித்து கூட்டமாகக்கூடி ஒன்றன்மே லொன்றாக அடுக்குண்டிருந்த மேகங்களை ஊடுருவிச்சென்றன. அச்சூரிய கிரணங்களால் பற்பல வேறு மிகவும் பிரகாசமான வர்ணங்களை யடைந்து உருவற்றிருந்த மேகங்கள் கட்டுக்கதைகளில் கூறிய விசித்திர ஆடையாபரணங்களை யணிந்த முனிகளும், பூதங்களும் செய்திடும் போர்க்களம் போல் தோன்றின.

இதைப்பார்த்து ஆச்சரியமடைந்து பாதையின் இருபக்கங்களிலும் அவன நோக்கலே அங்கே வித்தியாதனம் நிறைந்த பெரியோர்களைப்போல் தலைகுனிந்து நிற்கும் முதிர்ந்த

* Graceful demeanour.

நன்ருகக் கருவுடைய கதிர்களை யேந்திய நெற் பயிர் கண்களுக்கெட்டிய தூரம் செழிப்பால் சிறந்த வயல்களில் தள்ளாடிக்கொண்டிருந் தது. இடையிடையே நுண்ணிய நறுமணம் நிறைந்த தென்றல் இப்பயிர்மேல் வீசி சிற்றலை களை யுண்டாக்கிற்று. இவ்வழகை யனுபவித்து மறுபடியும் ஆகாசத்தை யண்ணுந்து பார்த் தான்.

அங்கு முன்னென்றன்மீதொன்ருய்ப் படிந்திருந்த மேகங்கள், காற்றினுல் பரவிச் சிறு பின்னங்களாய், மிகவும் ஒழுங்காகவும் வரிசையாகவும் அமைந்திருந்தன. பார்க்க ஒரு மகா சமுத்திரத்தில் சிறு தீவுகள் சேர்ந்திருந்தாற் போல் விளங்கின. நிமிஷத்திற்கு நிமிஷம் உண்டாகும் இவ்வேறுபாடுகளை உயிர் வாழ்க்கையிலுண்டாகும் மேடு பள்ளங்களுடன் ஒப் பிட்டுப்பார்த்து மிகவும் தத்துவமான எண்ணங்கள் மனதில் நிறைந்தவனுய் பாதி மெய் மறந்து நடந்துக்கொண்டிருக்கையில், தண்ணீர் சிறுவாய்க்கால்களில் பாறைகளின்மேல் முறுமுறுத்துக் கொண்டுசெல்லும் ஓசை காதிலின்பமாகப் பட்டது. மேலும் பறவைகள் செய்யும் "கலகல" ஓசையும், அவனை ஆலோசனையிலிருந்து தவிர்த்து, சுற்றுப்பக்கங்களுக்கு அவனைக்கொணர்ந்தது. மறுபடியும் வானம் எவ்வாறு இருந்ததென்று திரும்பிப் பார்க்கவும் தீவுகள்போலிருந்த மேகங்கள் நன்ருகக்கூடி நீண்டிருந்தன. அஸ்தமித்த சூரியனுெளியால் தணல்போல் பிரகாசித்தன. இறந்தபின் நமது ஆவிகள் கடக்கவேண்டுமென்று புராணிகர் கூறும் "வைதரணி" என்கிற அக்கினி நதியைப்போல அந்நீண்டமேகம் விளங்கிற்று. இவற்றையெல்லாம் பார்த்து கால்வலி கூடத்தெரியாமல் ஊரினெல்லைக்கு வந்துசேர்ந்தான். அங்கோ பாதையின் ஓரத்தில் ஒற்றைக்கிளையயுடைய "சவுக்கு" மரம் இலைகளையிழந்து நின்றுக் கொண்டிருந்தது. அக்கிளையின்மேல் ஒரு பறவை "கிக்கு கிக்கு" என்று கூப்பிட்டு உட்கார்ந்திருக்க மற்றொரு பறவை பறந்துவந்து அதனருகில் சற்றுநேரம் உட்கார்ந்து தானுங் கூவிற்று. பிறகு இரண்டு மொருங்காகப் பறந்து மறைந்தன.

"ஐயோ ! வண்டியை விட்டிறங்கினதும் சுகமனுபவிக்கச்செல்லும் தம்பதிகளைக் கண்டேன். இப்பொழுதோ சந்தோஷமடைந்த இரண்டு பட்சிகளைப் பார்த்தேன். வாழ்வின் துன்பங்கள் இவற்றைச் சற்றேனும் வருத்துவதில்லை. தம்முடைய சொந்த நிலைமைகளில் சுகப்பட்டுக்கொண்டிருக்கின்றன. என் கதியென்னவோ? இறைவனுக்கே வெளிச்சம்." என்று நினைத்து, கடைவீதியின் வழியாய்ச் சென்று, தான் போகவேண்டிய பெரிய மாட வீட்டு வாசலில்வந்து நின்ருன். சுமார் ஆறரை மணியிருக்கலாம். ஒரு சிறந்த கண்ணுடிக் கூண்டில் மண்ணெண்ணெய்* விளக்கு பிரகாசித்துக் கொண்டிருந்தது. வாசலில் சாயுந் திண்ணையில் தாடியும் மீசையும் நன்ருக நீண்ட தலைக்கனெருவன், தன் முழந்தாட்களை முழங்கால்களின் மேலிட்டு கைகளைத் தன் வழுக்குத்தலையில் சார்த்திக்கொண்டு கண்ணை மூடியவனுய் திறந்தவனுமாய்க் குந்திக்கொண்டிருந்தான். பக்கத்தில் உருமாலும் "சப்-ஜெட்ஜ்" என்று வரையப்பட்டுள்ள வில்லைமாட்டிய மார்ப்பட்டை "நாடாவும்" ஒன்றன்மேலொன்ருயிருந்தன. ஊரிலிருந்து வந்தவன் உள்ளே போக ஆரம்பித்ததும் "யார்சாமி அது ! உள்ளே போகக்கூடாது !! வா இப்படி" என்று அதட்டினுன்.

"இவனிடத்தில் என்னுடைய பூர்வோத்திரமெல்லாம் சொல்லிக் கொண்டிருக்கிறதா? உள்ளே சென்ருல் தானுக நம்மை யறிந்துக் கொள்ளுகிருர்கள் போய்விடுகிறதே நலம்" என்று தீர்மானித்து 'தடதட' வென்று நுழையத்தொடங்கினுன்.

தன் வார்த்தைகளை மீறிநடந்ததும், துலுக்கன் கோபித்து "யார் சாமி, அறிவுகெட்ட

* Kerosine Oil.

பாப்பானுய் இருக்கே, உள்ளே போகக்கூடா தென்றேன் போ'றயா! இதோ பார்—"என்று வேட்டை நாயைப்போல் சீறிக்கொண்டு, கையைப்பிடித்து வெளியே இழுத்து விடுபவன் போல் அருகே வந்தான்.

அப்பொழுது தான் இன்னது செய்வதென்று தெரியாமல் பிரமை பிடித்தவன்போல் தியங்கிக்கொண்டிருக்க, அதிர்ஷ்டவசமாய், நன்ருய்த் தேய்த்த குடத்தில் தீர்த்தத்துடன் கட்டையும் குட்டையுமாய் கறுப்பு நிறமாய் ஒரு பரிசாரகன் படிகளேறி வீட்டில் பிரவேசித்தான். நமதய்யரைப்பார்த்த, "வாருங்கோ மாப்பிள்ளை, எப்பொழுது வந்தீர்கள்" என்று வினவி, யுத்தம் செய்பவன்போல் நின்றுக் கொண்டிருந்த துலக்கனைப்பார்த்து "சாயபு! இவரை யாரென்று எண்ணிக்கொண்டாய், இவர்தான் நமது எஜமான் மாப்பிள்ளை" என்று சொல்லிவிட்டு உள்ளே சென்ருன்.

அதுவரையில் புலியைப்போல் எக்கழுத்தத்துடன் நின்ற துலுக்கன், பூனையைப்போல் தாழ்ந்து, "மஹராஜ், தெரியாமல் சொல்லி விட்டேன், மன்னிக்கவேணும், மன்னிக்கவேணும் எஜமானருக்குத் தெரிந்தால் வேலை போய்விடும். சோபித்துக் கொள்ளக்கூடாது மஹராஜ்!" என்று காலைத் தொட்டுத்தொட்டு சலாம்செய்ய ஆரம்பித்தான்.

"சாயபு! இது உன் தப்பிதமல்ல, காலத்தின் மகிமைகளில் இதுவுமொன்று" என்று சொல்லிவிட்டு வீட்டுக்குள்போய், கூடத்தில் போட்டிருந்த நாற்காலிகளொன்றிலுட்கார்ந்து, தனக்கு அன்றையதினம் சம்பவித்ததை யெல்லாம் மனதில் சுழற்றிக்கொண்டிருந்தான். இவ்வாறு பத்து நிமிஷங்கள் கழிந்ததும், மெத்தையின் மீதிருந்து, கையில் "மெழுகு வத்தி தீபமேந்தி, தன் மாமியார் வருவதைக் கண்டான். அழகும் கர்வமுமொருங்கே குடிகொண்ட அந்த அம்மாள், தன்னகைகளும் புடைவையும் நன்ருகப் பார்க்கப்படும் பொருட்டு, சற்றுதூரம் நடந்து பிறகு திடீரென்று நின்று, விளக்கைத் தாழ்த்தி, சக்கரவர்த்தினி ஒருத்தி கேவலம் தன் பிரஜையைப் பார்ப்பது போல், நமதய்யரை உற்றுப்பார்த்து, மிகவும் கம்பீரமான தொனியுடன் "வரணும்" என்று நான்கு எழுத்துக்களை உச்சாரணம் செய்து விட்டு, "தோரணி" நடையுடன் இரண்டாங் கட்டில் மறைந்தாள்.

"ஆஹா! இவள்தானிப்படி எதிர்கொண்டு அழைத்தாள். இவளுடைய மகள் எப்படியோ? நடக்கநடக்கத் தானே தெரிகின்றது" என்று வெகு விசித்திர சிந்தையுள்ளவனு யிருக்கையில், முன் கூறப்பட்ட பரிசாரகன் இரண்டாங் கட்டிலிருந்து பிரவேசித்துவந்து "ஏன்! நாழியாய்ச்சே, கைகாலலம்பி சந்திபண்ணி சாப்பிட எழுந்திருக்கிறதுதானே? எஜமான் வேலையாய்ப் பட்டணம் போயிருக்கிருர்; நாளைக்கு வந்துவிடுவார்; நீங்கள் யாருக்கும் காக்க வேண்டியதில்லை" என்று சொல்லிவிட்டுப் போனுன். பிறகு நமதய்யர் அரைமணி நேரத்தில் சாப்பிட்டுவந்து, கூடத்தின் மற்ருெரு பாகத்திலிருந்த மேஜையின்பாலுட்கார்ந்து அதன்மேலிருந்த "செண்டு ஜார்ஜ்" கோட்டையின் பத்திரிகையை கையிலெடுத்து, "காலியான வேலைகளுக்கு ஆட்கள்தேவை" என்றிருக்கிற பக்கத்தைத் திருப்பிப்பார்த்து அதில் தன்னைப்போல் பி. ஏ. பரீட்சை தேறினவர்களை 15-ரூபாய்க்கும், 10-ரூபாய்க்கும் விண்ணப்பங்களனுப்பும்படி கேட்டுக்கொள்வதைப் பார்த்து வியசனத்துடன் வியந்து, கலைகளில் தேர்ச்சி பெறுவதனுலுண்டாகும் நிஷ்பலனையுங் கருதி, மிகவும் துன்பமான நினைவுகளுக்கிடமானுர். ஆனல் பிரயாணத்தினுல், களைப்புண்டதினுல், தன் யோசனைகளுக்கு நடுவில் நித்திரையு மவரைக் கைக்கொள்ள ஆரம்பித்தது. இச்சமயத்தில் அவருடைய மாமியார் சற்றேனும் பிரேமாவது சந்தோஷமாவதில்லாத அதே கம்பீரத்துடன் "மீனுட்சி மேலே காத்துக்கொண்டிருக்கிருள்! போகலாம்" என்று கட்டளையிட்டுத் தூங்கச்சென்ருள்,

நமது அய்யரும் திடுக்கிட்டெழுந்து இருட்டு மூடின படிகளின் வழியாக மெத்தைக்கு ஏறிச் சென்று பித்தளைப் பிடிபோட்டிருந்த இரட்டை கைக் கதவுகளைத்திறந்து தன் மனைவியிருக்கு மறையினுள் புகுந்தார். இது வரையில் கடினமான காரையில் நடந்துவந்த பாதங்கள் அவ்வரையில் "வெல்வெட்" போன்ற இரத்தன கம்பளத்தின்மேல் மிகவும் இன்பகரமாய் படிந்தன. அவர் அவ்விடத்தில் கண்ட காட்சியோ கண்ணைக் கவரத்தக்கதாயிருந்தது.

விட்டத்தின் வளையத்திலிருந்து தொங்கிக்கொண்டிருந்த விலையுபர்ந்த ஒரு பெரும் 'வளி விளக்கு',* தன் ஒப்பற்ற பிரகாசத்தை அவ்வறையிலிருந்த ஒவ்வொரு சிறு வஸ்துவின் மேலும் வீசி, அதன் சிறப்பை நன்றாக எடுத்துக்காட்டிற்று. நான்கு சுவர்களிலும் நன்றாய் அமைந்திருந்த, 'இரவிவர்மா' எழுதிய ஆனந்தமானபடங்கள், அவ்வறையை கந்தருவ லோகமோ† என்று நினைக்கும்படி மனதை மயக்கத்தக்க ஒரு திவ்விய அலங்காரத்தை விளைவித்தன. நான்கு மூலைகளிலும் விசித்திரமான மேஜைகளின்மேல் அமைந்திருந்த, பட்டால் செய்த புஷ்பச்செடிகளும், சிற்றுண்டிகளும், பாலும் வைத்திருந்த மேஜையும், இரு பக்கங்களிலும் இரண்டு மெழுகு தீபங்களையுடையதாய் மற்றனேக தமிழ்ப்புத்தகங்களும், எழுதுவதற்கு வேண்டிய சருவிகளும் வைக்கப்பட்ட மற்றொரு அழகான மேஜையும், பார்க்கப்பார்க்கக் கண்களுக்குச் சிறந்த விருந்தாயின. ஒரு சிறு பூங்சொடியைப்போல் அமைத்து வைத்திருந்த ஊதுவத்திகள், மெய்மறக்கும்படி அவ்வறையை நன்மணத்தால் நிறப்பின. மேலும் மற்றொரு சுவரின் பால் "டிக், டிக்," என்று சப்தித்துக்கொண்டிருந்த கடிகாரமானது ஒவ்வொரு அரை மணிக்கும் ஒவ்வொரு சிறந்த ஆங்கிலேய கானத்தைச் செய்து காதுகளைக் களிப்பித்தன.

* Power Light.

† Fairy-Land.

இச்சிறந்த வஸ்துக்களின் அழகையெல்லாம் சின்னப்படுத்தி, தனக்கொப்பானவள் இனியிவ்வுலகிலில்லை யென்று விளங்கியவள் நமதய்யர் மனைவியே. பால்போல்வெளுத்து, அன்னஞ்சிறகைப்போல் மிருதுவாயிருந்த பட்டு அமளி பரப்பியிருந்த வில்விசைவைத் தமைக்கப்பட்ட ஒரு கட்டிலில், ‡ தலையைக்கையால் தாங்கி ஒரு சார்பாக மகாராணி ஒருத்தி பொழுதுபோக்குக்காகப் படுப்பதுபோல் படுத்திருந்தாள். சர்வவல்லமையுள்ள சிருஷ்டி கர்த்தா தன் திறமையை வெளியாக்கும்பொருட்டுவரைந்த படங்களில் மிகவும் மேன்மையுள்ளவளாய் விளங்கத்தகுந்த சிறப்பினளாயிருந்தாள். விண் மீன்களைப்போல் பிரகாசித்துச்சுழன்று தாமரை யிதழ்களைப்போன்ற கண்களும், மகிமைதங்கிய ஒரு சிற்பி சிற்றுளியால் தகர்த்தான்போன்ற மூக்கும், தென்றலில் அசையும் இளம் இலைகளைப்போல் துடித்து அடிக்கடி பற்களின் முறுவலைப் பகிரங்கப்படுத்தின. சிவந்த சிறிய உதடுகளும், மற்று ஆரோக்கியமும் அழகும் பாய்ந்துக்கொண்டிருந்த ஒவ்வொரு அங்கமும் சகலத்தையும் வெறுத்த துறவியின் தவசுடன் போராடி வெல்லத்தகுந்ததாயிருந்தன. மேலும் அவள் சரிகைகமலங்கள் நூற்கப்பட்ட ஒரு காசிப் புடவையை அணிந்திருந்தாள். அக்கமலங்களினும், கருமணல் போன்ற கூந்தலினும் நடுவில் பிரகாசித்த முகத்தை, அலங்காரரசத்துடன் சொல்லத் துணிந்தால் மேகங்கள் நட்சத்திரங்கள் இவைகட்கு நடுவில் பிரகாசிக்கும் பூரணசந்திரனுக்கு ஒருவாறு ஒப்பிடலாம்.

நமதய்யரைக்கண்டதும், படுத்திருந்தவள் நிதானமாக "உஸ்-ஸ்-ஸ்." என்று சப்தித்து எழுந்து, "இந்தப்பக்கம் எட்டிப்பார்க்க மாகானுபாவருக்கு இவ்வளவு நாளாயிற்றுக்கும்! பாவம் தலைபோகிற வேலை யங்கே" என்று கேட்டாள். இவ்வார்த்தைகள் ஒரு சிறிய

‡ Spring cot.

வெள்ளி மணியின் நாதத்தைப்போல் காதில் ஒலித்தன. "இவ்வழகும், குரலும், செல்வமும் வாய்ந்தவள் நமது மனைவியன்றோ" என்கிற சந்தோஷம் தன் நிலைமையை எல்லாம் மறக்கும்படி தன் மனதில் மேன்மேல் எழ நமதய்யர் மரத்தில் நன்றாய்ப் பழுத்த கனியை உண்ணச் செல்லும் வாலிபன்போல் ஓடி அவளருகே உட்காரப் பிரயத்தனப்பட்டார்; அவர் பாதிவழி சென்றதும் மனைவியானவள் பார்த்தவர்கள் பயப்படும்படி முகத்தைச் சிடுசிடுத்துக்கொண்டாள்; அவளுடன் சென்ற வாலிபன் பாதிவழியில் ஒரு பாம்பைக் கண்டால் எவ்வாறு திடுக்கிடுவானோ அவ்வாறு தடஸ்தமாய் நின்றான்.

"ஐயோ இந்த ஊருக்கு வந்தும் இக்கந்தைகளைத்தானே உடுக்கவேண்டும், எங்களண்ணா கொடுத்த சரிகை அங்கவஸ்திரங்களெல்லாம் எங்கே போயின? (சற்றுநேரங்கழித்து) எங்கேபோகிறதாவது? அக்கிழவி வயிற்றுப் பாட்டுக்காக விற்றுத்தின்றிருப்பாள்" என்று கடுகடுப்புடன் சொன்னாள்.

நமதய்யரப்பொழுது தான் உடுத்திருந்த வேஷ்டியைப் பார்த்துக்கொண்டார். தான் கச்சேரியில் எழுதுகிறபொழுது பேனாவை உதருகின்றதனால் விழுந்த "மைப்புள்ளிகள்" *ஏராளமாய் எங்கும் நிறைந்திருந்தன; மனதில் குதித்தெழுந்த கோபத்தை (தான் வந்த காரியம் பூர்த்தியாகவேண்டியதால்) அடக்கிக்கொண்டு மேஜையினருகிலிருந்த நாற்காலியிலுட்கார்ந்து "கட்டிக்கொடுத்த சோறும் சொல்லிக்கொடுத்த புத்தியும் எத்தனை நாளைக்கு; நாமே சம்பாதித்துச் செய்துக்கொண்டது தான் நமக்கு நீடித்துவரும் ———அது கிடக்கட்டும்; மீனு உன் விளையாட்டை எல்லாம் விட்டுவிட்டு இதைச் சற்றே கேள். என் தாயார் படுக்கையும் தானுமாக படுத்துக்கொண்டிருக்கிறாள்" என்று சொல்லி இச்சமாசாரத்தால் அவள் முகத்திலுண்டாகும் மாறுபாடுகளைக் கவனித்தார்.

"ஐந்துநிமிஷம் கழிந்தபிற்பாடு "உடம்பு என்னமோ?" என்று தனக்கும் மாமியாருக்கும் ஒரு சம்பந்தமும் இல்லாதவள்போல் மகா இளக்கத்துடன் வினவினாள்.

"பித்தக்காய்ச்சலாம்: எழுந்து நடக்கிறதே மிகவும் துர்லபம்; அன்னாகாரம் என்கிறது சற்றேனும் கிடையாது. உன்னைப்பார்க்கவேண்டுமென்று அவள் ஆசைப்படுவது இவ்வளவவ்வளவு அல்ல" என்று கல்நெஞ்சமும் இளகும்படி சமாசாரத்தை வெளியிடலாயினன். நமதய்யர் சொன்னதைக் கேட்டும் கேட்காததுபோல் நடித்து "அதற்கென்ன இப்பொழுது" என்று மிகவும் அசுவாரசத்துடன் கேட்டாள்.

"அவளோ தள்ளமாட்டாத கிழவி இங்கே வருவது மிகவும் அசாத்தியம். பிழைக்கிறாளோ! சாகிறாளோ! தெரியவில்லை. நீ யவ்விடத்தில் வந்து அவளுடைய கடைசி காலத்து ஆசையை திருப்திசெய்துவிட்டுவந்துவிடேன்" என்று தன் தாயாரை நினைக்க மனதில் அடங்காத்துயரமெழ மொழிந்தான்.

"என்ன சொன்னீர்கள்? நான் உங்கள் ஊருக்கு வருகிறதா? நன்றாயிருக்கு, அவ்விடத்தில் வந்து காலையிலெழுந்து சாணித்தண்ணீர் இரைத்துக்கொண்டும், புழுக்கல் அரிசி சமைத்த வெங்கலப்பானையையும், சொட்டுரசம் வைத்த கற்சட்டியையும் தேய்த்துக்கொண்டிருக்கவேண்டுமா? அதற்கா இந்தக்கைகள் உதவவேண்டும்" என்று சொல்லிக்கொண்டு எழுந்துவந்து தன் இரண்டு கரங்களையும் நமதய்யர் முன் நீட்டினாள். அவர் அவற்றைப் பிடித்துப்பார்த்து நிதானமாய் நசுக்கினார். புதிதாய் மலர்ந்த உரோஜா

* Ink spots.

புஷ்பங்கள்போல் சிவந்து நூற்றெடுத்த பட்டைப்போல் மிருதுவாயிருந்தன.

"எவ்வளவு நன்றாய்த்தான் கைகளிருந்த போதிலும் வேலை செய்யப்படாதென்று எங்கே சொல்லியிருக்கின்றது. அதோ மேஜையின்மேலத்தனை நவீன கதைகள்* வைத்திருக்கின்றாயே அதிலிருக்கிறவர்களெல்லாம் பிறர் சுகத்திற்காக எவ்வளவு தங்கள் சுயநயத்தை மறந்திருக்கிறார்கள். எங்கள் குடும்பம் ஏழைமைத்தனத்திலிருந்தபோதிலும் சமயத்தையறிந்து நடக்கவேண்டாமா!" என்று புத்தி சொல்லத் தொடங்கினான்.

பின்பு சொன்னதற்கு சற்றும் செவிகொடாமல் "ஆமாம்! கதைக்குக் காலுண்டா! என்னவோ அதில் சொல்லியிருக்காம் எனக்குப் புராணங்கூற வருகிறீர்கள். இன்றைக்கெல்லாம் நீங்கள் சம்பாதிப்பது மாதம் பதினைந்து ரூபாய். உங்களம்மாளுக்குப் பலகாரம் செய்யவேபோதாது. அதுகிடக்கட்டும்; நீங்கள் ஒரு வருஷம் சம்பாதிப்பதையெல்லாம் செலவிடாமல் சேர்த்தாலும் இதுமாதிரி ஒரு புடவை வாங்கமுடியுமா?" என்று தானுடுத்திய புடவையின் முந்தாணியை விளக்கின் முன்னால் விரித்தாள். அதில் கொடிகளாகவும் மாங்காய்களாகவும் பின்னியிருந்த சரிகை 'தகதக' வென்று பிரகாசித்து நமதய்யர் கண்களைக் கூசச்செய்தது.

இவள் செயல்களைப்பார்த்து மிகவும் ஆச்சரியமடைந்து நமதய்யர், "மீனா உன்னைப்போன்ற சிறுமிகள் எத்தனைபேர் திருப்தியுடனும் சுகத்துடனும் வாழ்கின்றார்கள், அவர்களெல்லாம் இப்புடவையா உடுத்தியிருக்கிறார்கள். இவற்றையெல்லாம்விட்டு நான் சொன்னதை ஆலோசி!" என்று தன் காரியத்தை ஞாபக மூட்டினார்.

"என்னத்தை ஆலோசிக்கிறது. இந்த பூமியில் என்னத்திற்கு பிறந்திருக்கிறோம்? இன்பமனுபவிப்பதற்கல்லவா? இக்காலத்தில் செல்வம்தான் இன்பம். நீங்கள் இவ்வேலையிலிருந்துக்கொண்டு வாழ்நாளெல்லாம் சம்பாதித்தாலும், இந்த நகைகளைப் பண்ணமுடியுமா?" என்று தன் கைகளிலணிந்த காப்பு கொலுசுகளையும் காசிமாலை முதலிய கண்ட ஆபரணங்களையும் தொட்டாள். மேலும் தான் செய்யும் நடிப்பை பூர்த்தியாக்கத் தன் முகத்தை சற்றே அசைத்தாள். அப்பொழுது அவள் 'தோடுகளில்' பதித்த முக்கோணங்களாகச் செதுக்கின வயிரங்களில் வானவில்லின் வர்ணங்களையுடைய மிகவுஞ் சிறுதீபங்கள் அங்குமிங்குமாகப் பிரகாசித்தன.

"இவளிந்த வித்தைகளை யெங்கு கற்றனளோ!" என்று ஐயமும் அச்சமுமடைந்த நமதய்யர்:

"மீனா இப்புடவைகளிலும் நகைகளிலும் என்ன இருக்கின்றது? எல்லாம் வீண். இனிக் கொஞ்சக் காலம் போனால் நீயே இவற்றையெல்லாம் வெறுப்பாய். சாகுமளவும் நம்மிருவரையும் ஒன்றாகப் பிணித்து, நமது இல்வாழ்க்கையைக் கடக்க சர்வ சவுக்கியமும் நிறைந்த மரக்கலமாயிருப்பது அன்பே. செல்வமயக்கத்தால் அவ்வன்பைக் கைவிடாதே. வேண்டாம்" என்று, உலகத்தை எள்ளளவேனும் நன்றாய் ஆராயாத தன் மனைவிக்கு நற்போதனை செய்தார். செல்வாக்கில் வளர்ந்து செல்வச்செருக்கு குடிகொண்ட அவளுக்கு இவ்வார்த்தைகளின் நியாயம் சற்றேனும் புலப்படவில்லை.

"நீங்கள் என்ன சொன்னாலுஞ்சரி, என்னால் அவ்விடம்வந்து கஷ்டப்படமுடியாது. நீங்களும் இவ்வூரைவிட்டுப் போகக்கூடாது என்று ஒரு நியாயாதிபதி தீர்ப்புசொல்வதைப் போல் சொன்னாள்.

*Novels.

"உனக்கு மிவ்வளவு கர்வமா? உங்கள் தகப்பனுருக்கு அடிமையென்று என்னை நினைத்தாயா? சோம்பர் என்னுடம்பில் சேர உங்களுடைய பசுமாட்டையும் குதிரையையும் போல் உட்கார்ந்திருக்கின்றவனு? நாமாக உழைத்துச் சம்பாதித்த பொருளின் மகிமையை நீ ஒருநாளும் அறியாய். நாளையதினம் போகின்றேன். இனி இந்தத் திசையில்கூடத் திரும்பிப் பார்க்கமாட்டேன்" என்று இரக்கமும் பச்சாதாபமுமற்று கடுகடுத்து மறுமொழி சொன்னுர்.

ஆண்மக்களை மயக்கும் சகல ஆயுதங்களும் தப்பவே கடைசி ஆயுதமான கண்ணரைவிட்டு அழத்தொடக்கினுள். அக்கண்ணீர் துளிக்குப்பின் துளியாக முத்தங்களைப்போல் ததும்புவந்த மற்றொரு சமபத்தில் நமதய்யர் பார்த்திருந்தால் இரக்கங்கொண்டு உடனே சென்று தழுவி முத்தமிட்டு அக்கண்ணீரைத் துடைத்திருப்பார். ஆனுல் இப்பொழுது தன் தாயாரையும் தன்னையும் நிந்தித்து எள்ளளவேனும் தன் வேண்டுகோளைக் கேட்க வில்லையென்ற கோபம் மனதில் குடிகொண்டதினுல், தலை குனிந்து தனியே நின்றுர். மீனுட்சி, கொழுக்கொம்பைச் சுற்றியிருந்த பூங்கொடி, பனி நீரை*ச்சிலிர்த்து அவிழ்ந்துவிழுவதைப்போல் அமளியின்மேல் கண்ணீர்விட்டுக்கொண்டே விழுந்து விம்மி விம்மி யழுதுக்கொண்டே தூங்கிவிட்டாள்.

நமதய்யரும் காலை மூன்றுமணி வரையில் தலைமேல் கைவைத்துக்கொண்டு ஆலோசனை செய்துக்கொண்டிருந்தார். தன் மனைவி விசனமற்று தூங்குவதையும் அதே அறையில் தான் மிகவும் துன்ப சிந்தையுடன் வருந்துவதையும் நினைக்க நினைக்க, கடவுளின் செயல்களில் மிகவும் வியப்பு அவருக்கு உண்டாயிற்று. கடைசியாக ஒன்றுந்தோன்றுதவராய், மேஜையின் மேலிருந்த ஒரு காகிதத்தில் நான்கு ஐந்து வரிகள் எழுதிவிட்டு கதவைத் திறந்து கீழேஇறங்கி, வெளியில் சென்றுர்.

மறுநாள் காலையில் "ஸப்-ஜட்ஜ" வீடு மிகவும் குழப்பமும் ஆரவாரமும் நிறைந்திருந்தது. மீனுட்சி தன் கையில் ஒரு கடிதத்தை வைத்துக்கொண்டு அழுதுக்கொண்டிருந்தாள். அவள் தாயார் "ஏண்டி அம்மா, அழுகின்றுய்" தலையெழுத்துக்கென்ன செய்யலாம், கலியாணம் செய்யும்பொழுதே எனக்குத் தெரியும். பாழுங்கிணற்றில் தள்ளவேண்டாம், தள்ள வேண்டாம் என்று சொன்னுல் உங்க ளப்பா கேட்டால்தானே ?" என்று தேற்றிக்கொண்டிருந்தாள். இச்சமயத்தில் ஊருக்குப்போயிருந்த 'எஜமான்' வந்து சேர்ந்தார்.

"என்னடி மீனு, அழுகின்றுய்" என்று கேட்டார்.

"என்னடி யாவது என்ன! உங்கள் பீ.ஏ. பியாஸ் பண்ணின மாப்பிள்ளைசெய்த கோலத்தைப் பாருங்கள். மீனு அவருடைய குடிசைக்கு அந்த கிழவிக்கு சமைச்சிபோட வரமாட்டேன் என்றுளாம். அதற்காக அவளைப் பிடித்தடித்து இந்தக் கடிதத்தையும் எழுதிவைத்துவிட்டு, யாவருடனும் சொல்லாமல் ஊருக்குப் போய்விட்டார்." என்று சொல்லி மீனுட்சியின் கையிலிருந்த கடிதத்தைக் காட்டினுள்.

"என் அருமையான மீனுட்சி,

"நீ பேசின வார்த்தைகளெல்லாம் மிகவும் நியாயமாய்த்தோன்றின. அவைகளால் நானுனக்குத் தகுந்த கணவனல்லவென்று தெரிந்துக்கொண்டேன். மேலும் இவ்விடமிருந்தால் என் தாயாரை மறக்கவேண்டிவரும். நான் உனக்குத் தகுந்த அகமுடையானென்று,

உனக்குத் தோன்றுகிறதை நான் அறியும் பொழுது மறுபடியும் வருகின்றேன்.

உன் அன்பிலாழ்ந்த,
தியாகராஜன்."

என்று அதிலெழுதியிருந்தது.

"சீ என்னடி மீனு, இந்த அற்பத்திற்கா அழுகிறது, நன்றாயிருக்கு! கழுதை கெட்டால் குட்டிச் சுவர்தானே!" என்று ஆறுதல் சொன்னார்.

"கழுதையோ, இன்னுங் கழுதையோ" என்று மங்களம் பாடினாள் அவர் மனைவி.

* * *
* * *
* * *

இச் சமாசாரங்கள் நடந்து மூன்றுவருஷங்களாயின. இதனிடையில், மீனாட்சி பிழைக்கிறாளோ சாகிறாளோ என்று சந்தேகிக்கும்படி பெருங் காயலாவில் கிடந்தாள். அவள் பிழைத்தது மறுபிறப்பு என்று சொல்லலாம். அவ்வாறு காயலாவில் வருந்தும்பொழுதே, அவளுடைய எண்ணங்களும், நினைவுகளும், பூரணமாக மாறிப்போய்விட்டன. அப்பொழுது உலகத்தில் பிறப்பது விலையுயர்ந்த நகைகளையும், ஆடைகளையும், அணிந்துகொள்வதற்கல்லவா" என்று எண்ணும் வினையைகொண்ட சிறுமியாயிருந்த அவள் "இவ்வுலகத்தின் பேரின்பமாகிய அன்பைக் கைக்கொண்டு இகபரங்களுக்கு நன்மையுண்டாகும்படி நடப்பதே இல்வாழ்க்கைக்குச் சிறப்பு" என்று நினைக்கும் ஒரு அறிவு முதிர்ந்த பெண்மணியானாள். தன் னுயிர்த்தோழனை தான் அவமதித்ததை யெண்ணி யெண்ணித் தானே தன்னை நிந்தித்துக்கொண்டாள்; திட்டியுங்கொண்டாள். அவரைக் காணவேண்டுமென்று மனமுருகினாள். மேலும், தன் தாய் தந்தையர் தன்னை யுண்மையாக வெறுக்காமல் போனாலும் முன்னவ்வளவு அன்புடனும் செல்வாக்குடனும் நடத்தவில்லையென்று தெரிந்து, அவர்களுடன் அதிகமாகப் பேசுவதையும் விட்டாள். தன் காதலன் அன்றிரவு எழுதிய கடிதத்தை பல முறைகளும் படித்து ஆனந்தித்து அதில் வரைந்திருந்த "உன் அன்பிலாழ்ந்த, தியாகராஜன்" என்பதை யாருமறியாமல் முத்தமிட்டுக்கொண்டாள். தன் கணவன் இருக்குமிடம் தெரியும்பொருட்டு, அவ்வூரிலிருந்த தன் தோழிகளுக்கு கடிதங்களெழுதினாள். தன் மாமியார் இறந்துபோனாள் என்கிற சமாசாரம் தெரிந்ததே ஒழிய மற்றவரிருக்குமிடம் தெரியவில்லை. சர்வமறிந்த தெய்வத்தின்பால் நம்பிக்கைவைத்து, தன் கணவனிருக்குமிடம் தெரிகிறதற்காக, கோயிலுக்குப்போய் நெய் தீபங்களையும் ஏற்றிக்கொண்டுவந்தாள்.

மீனாட்சி இவ்வாறு கணவன் தியானத்திலிருக்கும்பொழுது "மைசூர்" முத்திரை போட்ட ஒரு கடிதம் தன் தந்தைக்கு வந்து சேர்ந்தது. அதைப் பிரித்துப்பார்க்கும்பொழுது தியாகராஜன் கடிதமாகவே இருந்தது. மீனாட்சியடைந்த சந்தோஷத்திற்களவில்லை. தான் மைசூரில் பதினைந்து ரூபாய் வேலையிலிருப்பதாகவும் அப்பொழுதாவது தன் மனைவியை யனுப்ப அவர்களுக்கிஷ்டமா? என்று கேட்டிருந்தான். தாய்தந்தையர்கட் கிஷ்டமில்லமாற்போனாலும், மீனாட்சியின் தொந்தரவு சகிக்கமுடியாமல் சம்மதமென்றெழுதவே தியாகராஜனும் வந்து தன் மனைவியை மாத்திரம் அழைத்துச் சென்றான்.

அவர்கள் மைசூரிலிறங்கிய வீடு மிகவும் சிறியதான போதிலும், மீனாட்சி தன் கணவனின் நிலைமையை யறிந்து, யாவரும் மகிழும்படி இல்லறம் நடத்திவந்தாள். முன் அவள் அடைந்திருந்த கர்வத்தையும் பிறகு தனக்கு கீழ்ப்படிந்து தன்னைத் திருப்திசெய்யச் செய்த அவளுடைய செயல்களையும் தியாகராஜன் கண்டு அன்றிரவு மகா கம்பீரமாய் வார்த்தையாடின மீனாட்சியோ! என்றையுற்றான். தன் தாழ்வையும், ஏழ்மையையும் குறித்து சொல்பழமுறையிடாமல் வீட்டிற்குரிய ஒவ்வொரு

காரியத்தையும் சுத்தமாகவும் சிறப்பாகவும் மீனாக்ஷி செய்ததை பல முறைகளிலும் பரி சோதித்து முன்னிலும் பதின்மடங்கதிகமான அன்புடன் அவளைத் தியாகராஜன் நேசித்தான். இவ்வாறு ஒரு மாதம் செல்ல ஒரு நாள் தியாகராஜன் "தன் சிநேகிதன் கட்டிய ஒரு அழகான வீட்டைத் தன் மனைவிக்குக் காண்பிக்கும்பொருட்டு அவளைத் தன்னுடன் அழைத்துச்சென்றான். அவ்வீடு இராஜ வீதியில் புதுமையாலும் அழகுடன் சேர்ந்த அடக்கத்தாலும் நன்றாக விளங்கிற்று. அவ் வீட்டி லிவர்கள் புகவே ஒவ்வொரு வேலைக் காரனும் இவர்களுக்கு மரியாதை செய்ய ஆரம்பித்தார்கள். ஒன்றும் தெரியாமல் பிர மித்து "இது யார் வீடு" என்று மீனாட்சி கேட்டாள். தியாகராஜன் அவளை மெத்தை யின்மேலழைத்துச் சென்று நன்றாயலங்கரித்த ஒரு அறையில் நுழைந்தான். அங்கே வேறு அநேக படங்கள் இடையில் ஒரு படம் திரை மூடப்பட்டுள்ளதாய் கவனிப்பைக் கவர்ந்தது. "அப்படத்திலுள்ளவர்களே இவ்வீட்டின் சொந்தக்காரர்கள்" என்றான்.

சரேலென்று ஓடி மீனாட்சி திரையை ஒதுக் கிப்பார்த்தாள். அதில் தன் தாயாரினுடம்பு அசௌக்கியமென்று தியாகராஜன் தன்னை அழைக்கவந்தநாளில் தான் கட்டிலின்மேல் படுத்திருந்ததும் அவன் "மைப்புள்ளிகள்" நிறைந்த வேஷ்டியைக்கட்டி பக்கத்தில் நின்ற தும் மிகவும் நன்றாக வரையப்பட்டிருந்தன. மீனாட்சி வெட்கமும் வியசனமுமடைந்து தலை குனிந்து கண்ணீர் பெருகவிட்டாள்.

"அன்றையதினம் நீ பேதமை நிறைந்த ஒரு சிறுமியாயிருந்தாய். உன்னை மன்னிக்க பிறகு எனக்கு அநேக சமயங்கள் வாய்த்தன" என்று அவளைத் தழுவி முத்தமிட்டான்.

* * * * *

தியாகராஜன் ஐசுவரியம் பெற்றது ஒரு அற்புதமல்ல. அவன் தன் வேலையிலிருந்துக் கொண்டே எம். ஏ. பரிட்சை தேறி பின்பு மைசூர் திவானுக்கு விண்ணப்பம் செய்துக் கொள்ளவே, அவர் இவனுடைய கல்வித் தேர்ச்சியையும், நன்னடத்தையையும் தானகப் பரீக்ஷித்து, ஆச்சரியமடைந்து மைசூர்க் கலா சாலையில் இருநூறு ரூபாய் வேலையைக் கொடுத்தருளியிருந்தார்.

## CHILDREN'S PAGE

*(Adapted from the Children's Magazine)*

### ஒரு தாய் தன் குழந்தையைப் பற்றிக் கூறியது.

("சில்ட்ரன்ஸ் மகஜீன்" எனனும் "ஆங்கிலப் பிள்ளைகள் பத்திரிகை"யின் 1914-ம் வருஷத்து ஜனவரிமாதச் சஞ்சிகையின் 83-வது பக்கத்தில் பிரசுரமாயிருக்கிற ஒரு பாடலின் கருத்தைத் தழுவி யெழுதியது.)

"துணிவுடைச் சிறுநர! சொல்லுதி இன்னே,
உன்னாற் பெறலாம் ஊதியம் என்னே?
என்பயன் நின்னா லென்ப தறியேன்.
சொல்ல வல்லையேல், சொல்லுதி வல்லே.
தாமரை யிதழெனத் தயங்குகை விரலாய்!
திங்களை வளைந்து திகழ்கரு முகில்போற்
சுந்தர வதனம் சூழ்ந்து தொங்கி
இருண்டு சுருண்டெழில் எறிக்குங் குஞ்சியாய்!
ஒருநாள் போல உறுபல நாளும்நீ
செய்சிறு குறும்புக் கெய்தள விலையால்.
யாவது நின்னா லாவ தென்ன
உன்னாற் சொல்ல ஒல்லு மென்னில்
நன்குசிந் தித்து நவிலுதி வல்லே."
என்றனன். என்றலும் இருசிற் றடிகள்
குறுகுறு நடந்தெனைக் குறுகியென் மடிமேல்
உற்றன. மிகுகளி ஒளிர் எழில் இளவிழி
கூர்ந்தெனை நோக்கின. குறுநகை அரும்பின.
இருசிறு செங்கைகள் என்னிரு கதுப்பினை
இறுகுறப் பற்றியீர்த் தினிதின் அணைத்தன.
"உனது வினவுக் குறுவிடை கேட்டி
அன்னாய்! யான்உனக் கன்பு செய்தலே †
என்னால் ஆம்பயன்" என்னப்
பவளவாய் திறந்ததென் பாக்கியந் தானே."

இதன் பொருள்:—"ஏ! துணிவுடைய சிறிய மனிதனே! (பெரிய மனிதர்போல் நடிக்கும் சிறிய குழந்தையே) உன்னால் நான் பெறக்கூடிய இலாபம் யாது? இப்பொழுதே சொல்வாயாக. உன்னால் என்ன பிரயோசனமென்று எனக்குத் தெரியவில்லை. நீ சொல்லக்கூடுமானால் சீக்கிரம் சொல்வாயாக. தாமரை மலரும் அதன் இதழ்களும் போன்ற கையும் விரலும் உடையானே! சந்திரனைச் சூழ்ந்து விளங்குகின்ற கரிய மேகம்போல, அழகிய முகத்தைச் சூழ்ந்து கரியநிறமும் சுருள்களும் கொண்டு விளங்கும் அழகுள்ள தலைமயிருள்ளானே! நீ தினந்தோறும் செய்யும் சிறு குறும்புகள் கணக்கில் அடங்கா. உன்னால் ஆவது யாது என்று உன்னாற்

சொல்ல முடியுமானால், அது இன்னதென்று நன்றாக ஆலோசனைசெய்து சீக்கிரமாகச் சொல்வாயாக" என்று (சற்றுத் தூரத்தில் நின்றுகொண்டிருந்த என் குழந்தையைப் பார்த்துச் சொன்னேன். அப்படிச் சொல்லியவுடனே, (என் குழந்தையின்) இரண்டு சிறிய கால்கள் குறுநடைகொண்டு நடந்து வந்து என் மடிமேலுற்று நின்றன. மிகுந்த களிப்புடன், இலங்கும் அழகும் இளமையும் உள்ள கண்கள் என் முகத்தைநோக்கி (நான் கேட்ட கேள்வியை, தெரிந்துகொண்டு கேட்டேனோ தெரியாமற் கேட்டேனோ என்று கண்டு பிடிக்கும்படி) கூர்ந்தபார்வையாகப் பார்த்தன. (என்னால் ஒரு பிரயோசனமும் இல்லையென்றோ எண்ணுகிறாய், சிறந்த பிரயோசனம்என்னால் உண்டு என்பதை நீ தெரிந்துகொள்ளவில்லையே. இவ்வளவுதானா உனக்குத்தெரிந்தது! என்று பரிகாசம் செய்யும் குறிப்போடு கூடிய) சிரிப்புத் தோன்றச் சிறிய பல்லுகள் வெளித்தோன்றி விளங்கின. இரண்டு சிறிய சிவந்தகைகள் என்னிரண்டு கன்னங்களையும் இறுக்கமாகப்பற்றி (என் முகத்தை எதிர்முகமாகவும் சமீபமாகவும் உறும்படி) இனிதாக இழுத்தன. "என் அம்மையே! என்னால் யாது பிரயோசனமென்று கேட்ட கேள்விக்கு மறுமொழி கூறுகிறேன். கேட்பாயாக நான் உனக்கு அன்பு செய்தலே † என்னாலானபிரயோசனம்" என்று (என் பாக்கியமாகிய என்குழந்தை) பவளம்போன்ற வாய் திறந்து கூறியது என் தவப் பயனே."

V. P. SUBRAMANIA MUDALIAR.

† *Compare the following from the Gospel of the Holy Mother:—*

"அன்பூண்"

"அம்மாளுக்கங்கம் கொழுத்ததென்றான் என் 'கண்ணு'
நஞ்சுண்டகுழந்தையவன் தாயாரைத்தேடினதால்
காயும்கறியும்கனிபலவும் தின்னூறமிக்காயம்
பல்கிப்பெருகிப் பருத்திடல் தானதிசயமோ
அருமையுடனவன் வார்க்குமன்பாமமிர்தத்தை
அகமகிழ்ந்தவள்பருகிடுங்கால்."-ஆனந்தத்தாய்மொழி,
3-வது வளர்ச்சிப்பருவம், கிளர்ச்சிப்படலம்.

*cf.* Also Jesus' saying to his disciples: "I have meat to eat that you know not of."—வி.சி.ப.]

## ON THE EVILS OF GAMBLING.

### சூதுசெய் துன்பம்.

(SELECTIONS FROM STANDARD AUTHORS.)

நளவெண்பா.

1. அறத்தைவேர் கல்லும் அருநரகிற் சேர்க்கும்
திறத்தையே கொண்டருளைத் தேய்க்கும்—மறத்தையே
பூண்டுவிரோ தம்செய்யும் பொய்ச்சூதை மிக்கோர்கள்
தீண்டுவரோ என்றார் தெரிந்து.

2. உருவழிக்கும் உண்மை உயர்வழிக்கும் வண்மைத்
திருவழிக்கும் மானம் சிதைக்கும்—மருவும்
ஒருவரோ டன்பழிக்கும் ஒன்றல்ல சூது
பொருவரோ தக்கோர் புரிந்து.

நைடதம்.

3. சீலநற் றருமமெய் சிதைக்கும் தெண்டிரை
வேலைமுற் றிருநிலக் கிழமை வீழ்த்திடும்
மாலுறுத் திடும்கவ ருடல் மன்னகேள்
கோலிழுக் கரசர்தம் கொள்கைத் தென்பவே.

4. கள்ளுண விரும்புதல் கழகம் சேர்தல்மால்
உள்ளுறப் பிறர்மனை நயத்தல் ஒன்னலர்க்

கொள்ளரும் ஞாட்பினுள் இரியல் செய்திடல்
வள்ளியோய் அறநெறி வழுக்க மென்பவே,

5. ஐயநீ ஆடுதற் கமைந்த சூதுமற்
றெய்துநல் சுரவினுக் கியைந்த தூதுவெம்
பொய்யினுக் கருந்துணை புன்மைக் கீன்றதாய்
மெய்யினுக் குறுபகை யென்பர் மேலையோர்.

6. எள்ளுநக சூதினை இகலி வென்றதூவும்
கள்ளமேற் கொடுவலை கரந்து வேட்டுவர்
உள்ளுற வைத்திடும் உணவை ஓர்கிலர்
புள்ளின மருந்தின போலும் என்பவே.

வில்லிபுத்தூரார் பாரதம்.

7. அடியும் ஆண்மையும் வலிமையும் சேனையும் அழகும் வென்றியுந்தத்தம்
குடியும் மானமும் செல்வமும் பெருமையும் குலமும் இன்பமுந்தேசும்
படியும் மாமறை யொழுக்கமும் புகழும்முன் பயின்ற கல்வியுஞ்சேர
மடியு மால்மதி யுணர்ந்தவர் சூதின்மேல் வைப்பரோ மனம்வையார்.

8. குழக ராய்இள மடந்தையர்க் குருகுவோர் குறிப்பிலா மையின்நாளும்
பழகு வார்மிகச் சிந்தைநோய் தாங்களே படிக்குமா றுணராமல்
அழகு பேரறி வாகவே கொண்டவர் அறத்தொழில் புரியாமல்
கழக மாடவும் பெறுவரோ இதனினும் கள்ளுண லினிதன்றே.

வேறு.

9. மேதகத்தெரி ஞானநூற் புலவரும் வேத்துநூ லறிந்தோரும்
பாதகத்திலொன் றென்னவே முன்னமே பலபடப் பழித்திட்டார்
தீதகப்படு புன்றொழில் இளைஞரிற் சிந்தனை சிறிதின்றித்
தோதகத்துடன் என்னையோ சகுனிதன் சூதினுக் கெதிரென்றான்.

வேறு.

10. மீதெடுத்த வஞ்சராகி வெகுளிசெய்தல் பிறர்பெரும்
கோதெடுத் துரைத்தல்நண்பு கொண்டயிர்த்தல் கொடியவெம்
சூதெடுத்து விழைதல்உற்ற சூள்பிழைத்தல் இன்னவே
தீதெடுத்த நூலின்முன்பு தீயவென்று செப்பினர்.

திருக்குறள்.

11. சிறுமை பலசெய்து சீரழிக்கும் சூதின்
வறுமை தருவதொன் றில்.

12. பழகிய செல்வமும் பண்பும் கெடுக்கும்
கழகத்துக் காலை புகின்.

13. பொருள் கொடுத்துப் பொய்மேற் கொளீஇ யருள்கொடுத்
தல்லல் உழப்பிக்கும் சூது.

14 உடைசெல்வம் ஊண்ஒளி கல்விஎன் றைந்தும்
அடையாவாம் ஆயம் கொளின்.

கொன்றைவேந்தன்.

15. சூதும் வாதும் வேதனை செய்யும்.

ஆத்தி சூடி.

16. சூது விரும்பேல்.

# Kindergarten Page.

## GLEANINGS FOR THE INDIAN KINDERGARTENER.

"SUFFER THE LITTLE CHILDREN TO COME UNIO ME"—CHRIST."

COME LET US LIVH WITA OUR CHILDREN"—FROEBEL.

## ACTION SONG FOR CHILDREN.

# பாலலீலை.

குழலினிதியாழினி தென்பர்தம்மக்கள்
மழலைச் சொல்கேளாதவர்—திருக்குறள்.

Objects:—பூனை, எலி. Idea:—பூனை எலி பிடிக்கும்.

1. வா பூனை, வா,
எலி பிடி, வா,
ஓடிவா, ஓடிவா, எலிபிடிக்க.

2. போ, எலி போ,
பூனை-பிடிக்கும், போ,
ஓடிப்போ, ஓடிப்போ,
பூனை பிடிக்கும்.

3. பூனை வா, பூனை,
எலி பிடி, வா,
வா வா வா, எலி பிடி வா.

4. எலி ஓடு, எலி,
பூனை பிடிக்கும் ஓடு,
ஓடு ஓடு ஓடு, பூனை பிடிக்கும்.

[குறிப்பு: இப்பாட்டு குழந்தைகள் கிண்டர்கார்டன் முறைப்படி பாலலீலை செய்வதற் கேற்றதாய், அமைக்கப்பட்டிருக்கிறது. இதில் குழந்தைகளுக்கு பூனையையும் எலியையும் பிரத்தியக்ஷமாகக் காட்டிய பின்,

"பூனை எலி பிடிக்கும்"

என்னும் உண்மையை தாயார் அல்லது வாத்தியார் அவர்களுக்குணர்த்த வேண்டும். பிறகு ஒரு குழந்தை பூனையாகவும் மற்றொரு குழக்தை எலியாகவுமிருக்க பாவித்து, மூன்றாவது குழந்தை அல்லது மற்றக்குழந்தைகளெல்லாம் சேர்ந்து இப்பாட்டை வார்த்தைகளின் அருத்தத்துக்குப் பொருந்த அபிநயங்காட்டிப் பாடவேண்டும். "வா பூனை" என்னும் பாட்டை அபிநயத்தோடு பாடிக் கடைசி வரியாம் "ஓடிவா, ஓடிவா, எலி பிடிக்க" என்பதைச் சொல்லி அபிநயத்தோடழைக்கும்போது பூனையாகவிருக்க நியமித்த குழந்தை பூனை எலிபிடிக்க வருவதுபோல் பதுங்கிப் பதுங்கி இலக்குப்பார்த்துக் கொண்டு மெல்லவர ஏற்பாடு செய்யவேண்டும். உடனே குழந்தைகள் எலியாக விருக்க நியமித்த குழந்தையைப் பார்த்து "போ எலி, போ" என்று பாடி "ஓடிப்போ, ஓடிப்போ, பூனை பிடிக்கும்" என்று ஆபத்து வந்து விட்டதுபோல் அவசரப்பட்டு அபிநயங்காட்டிச் சொல்லவும் எலியாக விருக்க நியமித்த குழந்தை பூனை பதுங்கிப் பதுங்கி வருவதைப் பார்த்துவிட்டு பயந்தோட வேண்டும். அப்பொழுது "பூனை" எலி ஓடிவிட்டதென்று திரும்ப, குழந்தைகள் மறுபடியும் மூன்றாவது பாட்டைப்பாடி அதைக் கூப்பிடவேண்டும். அதைக்கேட்டு பூனை முன்போல் வர, உடனே எலியைப்பார்த்து ஓடிப்போவென்று நாலாவது பாட்டைப் பாடுவார்கள். அப்பொழுது எலியோட பூனை ஏமாந்துபோம்.

இதனால் குழந்தைகளுக்கு மனக்கிளர்ச்சி யுண்டாகி வார்த்தைகளை உபயோகிப்பதினாலுண்டாகும் பயனையறிந்து புலன் பொறிகளெல்லாம் வார்த்தைகளின் பொருளையும் அதன் முன்பின் தொடர்பையும், கவனிக்கப் பழகுவதால் புத்தி தீக்ஷண்ய முண்டாகும். "தொட்டிற்பழக்கம் சுடுகாடுமட்டும்" என்றிருப்பதால், பாலப்பருவத்திலேயே தங்கள் மனதோடு புலன் பொறிகளெல்லாம் ஒத்து வேலைசெய்யப் பழகின குழந்தைகள் அதே பழக்கம் மேலிட்டு எந்த விஷயத்தையும் தீரத்தெளிய உற்று நோக்கி யுண்மை யுணரும் சக்திவாய்ந்தவர்களாவார்கள். 4-வயது முதல் 8-வயது வரையில் இப்படி புலன் பொறிகளை புத்தி தீக்ஷணியத்துக்காதாரமாக உபயோகிக்கப் பழகின குழந்தை பின் அது கற்கு மெல்லாவற்றையும் நுட்பமாக ஆய்ந்து எதையும் "கசடறக் கற்கும்" சக்தி வாய்ந்ததாகும்.]

புஸ்தகம்-23.] [சஞ்சிகை-1.
"The Children's Favourite, The Teachers' Help, And the Parents' Guide."

ராக்ஷஸஷு சித்திரைமீ } விவேக  சிந்தாமணி { April May 1915.

ESTABLISHED 1892

"பெற்றோர்கள் தாழவப்பர் பிள்ளைகளி லாசையுள்ளோர்
கற்றே மெனவுகந்து கற்பர் பின்னும்—மற்றோர்கள்
மாச்சரியத் தாலிகழில் வந்ததென்னேஞ் சேயிகழ்கை
யாச்சரிய மோதா னவர்க்கு."

## THE VERNACULAR AS A MEDIUM OF INSTRUCTION.

### வித்தியாபோத சாதனமுறை.

தாய்பாஷையின் சிறப்பு.

"சாதனமின்றிச் சாதிப்பாரில்லை." இது ஒரு உண்மையான பழமொழி. வித்தியா போதம் செய்ய வழியென்ன? அறிவு விசாலிக்கச் செய்வதே வித்தியாபோதமாம். இதற்கு மனமும் இந்திரியங்களும் தத்தம்வேலைகளைக் குறைவறச் செய்யப் பழக்கப்படவேண்டும். மனப்பழக்கத்தில் இந்திரியங்களின் பழக்கமும் அடங்கும். "கற்றதோர் கல்வியும் மனப் பழக்கம்" என்றார் ஔவைபாரும். ஆதலால் மனப்பழக்கத்திற்கு இன்றியமையாத சாதனமென்ன? "எண்ணும் எழுத்தும் கண்ணெனத் தகும்" என்றார்: அதாவது சங்கல்ப விகற்பரூபமான மனதின் காரியங்களையறியும் அறிவாகிய எண்ணுதலும் அந்த எண்ணுதலுக்குச் சாதனமாயிருக்கிற கலைகளும் முகத்துக்குக் கண்கள்போல அறிவுக்கு அறியும் கருவிகளாயிருக்கின்றன. எண் என்பதில் கணித சாஸ்திரமும் அடங்குமாதலால் அதைப்பற்றிப் பிரத்தியேகமாகச் சொல்லவில்லை. எழுத்து என்பது எழுத்துக் களிலிருந்துண்டாகும்

• பாஷா ஞானத்தையும் குறிக்கும்.

மனப்பழக்கம் நன்றாகச்சித்திக்கப்பெறுதல் தானே கல்வி, வித்தை, இங்கிலீஷில் "Education" என்று சொல்வதெல்லாம். அப்படியென்றால் அறிவை விசாலிக்கச் செய்வதென்று பொருள்படும். அறிவு விசாலிக்கப் பார்வை தீக்ஷண்யமாகப் பெறல்வேண்டும். "பார்வையிரண்டுண்டு பஹிர் அஹமுகமென்பர்"

என்றதனால் பஹிர்முகப்பார்வையோடு அஹமுகப்பார்வையும் தீக்ஷண்யம் பெறல் வேண்டும். பஹிர்முகப்பார்வை யென்றால் என்ன?

"பார்வை பஹிர்முகம் பரந்தவுலகாராயில்" என்றார். அப்படியே அஹமுகப்பார்வையைச் சுட்டுவான், "பார்வை அஹமுகம் உள்ளுணர்வை யோர்ந்துணரில்," என்று ஓதியுள்ளார். இதையே Objective and Subjective side of Education என்பர். இதையே உலக ஞானம் உண்மைஞானம் என்றும் சொல்லுவர் பெரியோர். உலகஞானம் பஹிர் முகம்; உண்மைஞானம் அஹமுகம் அல்லது அந்தர் முகம். மனதை உள்ளும் புறமுமாகத்திருப்பிப்பார்க்கும் சக்திவேண்டும். அதற்கு கலைஞானம் இன்றியமையாத சாதனம். இந்த கலைஞானங்களில் ஒன்று பாஷாஞானம். பாஷாஞானமும் (எழுத்தும்) கணிதமுதலானசாஸ்திர கலைகளும் (எண்ணும்) இரண்டு கண்கள்.

பாஷைகள் அனந்தம்; சப்தம் ஒன்று. அப்படியென்றால்சப்தமாத்ரையாகவுள்ள ஏகதத்துவத்திலிருந்துபிறந்த துவனியும் வர்ணரூபமான எழுத்தும் பலவேறுபட்டிருப்பினும் அவைகளின் மூலம் ஒன்றே. உதாரணமாக "அ" என்கிற எழுத்தின் வர்ணமும் த்வனியும் பல

பாஷைகளில் பலவேறுபட்டிருப்பினும், சப்த மாத்ரையான மூலகாரணம் எல்லாவற்றிற்கும் ஒன்றே. வாயைத்திறக்காமல் அ என்கிற சப்தம் பிறக்காது. இப்படியே ஒவ்வொன்று க்கும் மூலம் ஒன்று. கலைகள் பலவேறு பட்டிருக்கும். அது எப்படியென்றால், ஒரு விருக்ஷத்துக்கு ஆணிவேர் ஒன்றே மூலமாக கிளைவேர்களும் கப்புக்கிளைகளும் பல விருக் கின்றமைபோல வென்பர். தோற்றப்பிரப ஞ்சமெல்லாம் காரணகாரியதோரணையை யனு சரித்து விளங்குகின்றது. காரணகாரிய தோரணையும் "காரணகாரணமாயும் அகார ணமாயும்" இருக்கப்பட்ட மூலதத்துவம் ஒன்றை ஆதாரமாகக்கொண்டு அதிலிரு ந்துண்டாகி கப்புக்கிளைகளாய் விரிந்துபரவி விளங்குகின்றன. இந்தக் காரணகாரிய தோரணையை உள்ளபடி யுணர அஹமுகப் பார்வை தீக்ஷண்யம் வேண்டும். காரணகாரிய தோரணையின் விளக்கமான தோற்றங்களாம் பிரபஞ்ச மாறுபாடுகளை யுணர பஹிர்முகப் பார்வை தீக்ஷண்யம் வேண்டும். இப்படி அறிவு விசாலிக்க இன்றியமையாத இருபார் வைகளும் "கண்ணிரண்டும் ஒன்றையே காண் கிறன் பார்" என்றதுபோல ஏகமாயுள்ள மூலதத்துவத்தைப் பார்த்துணரவல்லதா யிரு க்கவேண்டும்.

பார்வை தீக்ஷண்யம் என்றால் என்ன? சூரியன் ஒளி வீசுகிறன். அந்த சூரியன் வீசும் ஒளியினல் நாம் எல்லாவற்றையும் பார்க் கிறோம். ஆனல் சூரியனிடத்து ஒளியிருப் பதுபோல் நமது கண்ணிலும் ஒளியிருந் தால் தான் கண்ணுக்குப் பார்வை யேற்படும். இல்லாவிட்டால் கண்ணுக்குப் பார்வையில்லை. சூரியப் பிரகாசத்தினல் எல்லாவற்றையும் காண்கிற நம் கண் சூரியனைப்பார்க்க கூசுகின் றது. கழுகின் கண்கள் சூரியனையே நேரப் பார்க்கும் தீக்ஷண்ய முடையவையாயிருக்கின் றன. மனிதரைவிட கழுகுக்குப் பகலில் பார்வை தீக்ஷண்யம் அதிகம். இப்படியே பக லில் காணும் கண் இரவில் விஷயங்களைக் காணக்கூடாமலிருக்கிறது. ஆனல் ஆந்தை முதலிய ஜந்துக்களின் கண்கள் இரவில் நன்று கப் பார்க்கும் சக்தி வாய்ந்திருக்கின்றன. ஆத லால் ஆந்தைக்கு இரவில் பார்வை தீக்ஷண்யம் அதிகம். இப்படி பகலில் தீக்ஷண்யம் பொருந் திய கண்கள் இரவில் பார்வைகுன்றியும், இரவில் தீக்ஷண்யம் பொருந்திய கண்கள் பக லில் பார்வை குன்றியும் இருக்கிறதைப் பார்க் கிறோம். "உண்மையான பார்வை தீக்ஷண் யம்" என்பது இந்தக் குற்றமின்றி இரவிலும் பகலிலும் நன்றுகப் பார்க்கும் தீக்ஷண்யம் பொருந்தியிருக்கும். இவ்விரண்டு பார்வைக் கும் காரணமாயிருப்பது கண் ஒன்றே. அந்தக் கருவியைப் பழக்க வழக்க விசேஷத்தால் தீக்ஷண்யம் பெறச் செய்வதால் பார்வை தீக்ஷ ண்யம் உண்டாகிறது. அஃதேபோல், மனக் கண் ஒன்றே. அது உலகஞானம், உண்மை ஞானம் இரண்டும் பொருந்தியதாக விளங்க பஹிர்முகப் பார்வை, அஹமுகப்பார்வையென் கிற இரண்டும் பூரணமாகப் பொருந்தியதாக விருக்கவேண்டும். இது பழக்க வழக்கத் தாலே சாதனசாதக முறைபற்றிச் சாத்திய மாக சாதிக்கப்பெறல்வேண்டும்.

பகலில் பார்ப்பது விஷயஞானம்; இரவில் பார்ப்பது சூக்ஷ்மஞானம். "இரவு பகலற்ற விடம்" உண்மைஸ்தானம்: அங்கே காண் பது அபேதஞானம். "பார்வை யிரண்டும்" அங்கே ஒன்றையே காண்பதால் "அபேதம்" என்று சொன்னதன்றி இரவுக்குப் பகல்பேத மில்லையென்று சொன்னதில்லை. நிலைக்கண்ணாடி யில் காண்கிறவன் கண்ணாடியில் காணும் சாய லும் தன்முகமும் ஒன்றென்றறிந்தால் அது

அபேதஞானம். குழந்தை கண்ணாடியில் ஒரு "பாப்பா" தெரிகிறது என்று அஃதை தனக்குவேறாக அறிந்து விளையாடுவது வேதஞானம். இப்படி உருவமும் சாயலும்போல் உண்மையும் தோற்றமும் விளங்குகிறது; அவ்விரண்டையும் ஒன்றாக உணர்வதுதான் அபேதஞானம். இதற்கு "அபேத தரிசனம்" என்று சுருதி கூறுகிறது. இந்த அபேத தரிசனம் தானே "ஞானம்"—அதாவது, உண்மையான அபேதஞானம்.

இந்த ஞானத்தைப்பெறுதலே வித்தியாப்பியாசத்தின் முடிவு. இந்த வித்தியாப்பியாசம் பெறப் பழகுவதே வித்தியாபோதம் அல்லது "பள்ளிப்பழக்கம்" என்று சொல்வது. இந்த பள்ளிப்பழக்கம் பழகுவதில் ஸ்வபாஷையை உபயோகிப்பது நல்லதா அந்நிய பாஷையை உபயோகிப்பது நல்லதா? ஸ்வபாஷை அல்லது தாய்பாஷையே மேலான சாதனமென்பது எல்லாராலும் ஒப்புக்கொள்ளப்பட்டுள்ளது. ஆனால் ராஜபாஷையாகிய ஆங்கிலத்தை விட்டுவிடலாமா? என்றால், அதுவும் தேவையென்று எல்லாராலும் ஒப்புக்கொள்ளப்படுகிறபடியால் அதை பாஷாஞானமாகப் பயின்று மற்ற கலைக்ஞானங்களையெல்லாம் பிரதம பாடசாலைகள்நடுத்தரபாடசாலைகளிலன்றி 'செகண்டரி ஸ்கூல்' என்று சொல்லும் உயர்தர பாடசாலைகளிலும் இங்கிலீஷை பாஷாஞானமாகப் போதித்து மற்ற பாடங்களையெல்லாம் பிள்ளைகளின் தாய்பாஷையைக் கொண்டே போதிப்பது உசிதமென்று எல்லாராலும் ஒப்புக்கொள்ளப்படுகிறது. இதைப்பற்றி கனம் ராம ராயனிங்கார் அவர்கள் அரசர் பிரதிநிதி சட்டநிரூபண சபையில் ஒரு தீர்மானம் கொண்டுவர அதைப்பற்றி நடந்த தர்க்கத்தின் சாராம்ஸத்தை வித்தியா மந்திரியாகிய ஸர் ஹார்கோட் புட்லர் அவர்கள் தொகுத்துச் சொன்ன பாகத்தை அப்படியே யெடுத்து முகட்டில் அச்சிட்டிருக்கிறோம். இதைப்பற்றி அபிப்பிராயபேதம் உள்ளதாகத் தென்பட்டதால், இந்த யுத்தம் முடிந்தபின் இதுவிஷயத்தை லோகல் கவர்ன்மெண்டாருக்கும் மற்ற துரைத்தனத்தாருக்கும் அபிப்பிராயத்துக்காக அனுப்ப உத்தேசித்திருக்கிறார்கள்.

பிரதம பாடசாலைகளிலும் நடுத்தர உயர்தர பாடசாலைகளிலும் படிக்கும் சிறுவர்கள் பெரும்பாலும் 15-16 வயசுக்குள்பட்டவர்கள். இவர்களில் பெரும்பாலார் 'ஸ்கூல் லீவிங் ஸெர்டிபிகேட்'பெற்று பள்ளிப்படிப்பை விட்டு ஜீவனார்த்தம் பிழைப்புத் தேடவேண்டியவர்கள். இவர்களுக்கும் சிறுபான்மை காலேஜ் படிப்புப் படிக்க உத்தேசித்து ஸர்வகலாசாலையிற் பிரவேசிக்கும் சில பேர்களுக்கும் பள்ளிப்பழக்கம் மனப்பழக்கத்தை யுண்டுபண்ணியிருந்தால் தான் மேலே தொழிலோ வித்தையோ பயில்வது சுலபமாயிருக்கும். தாய்பாஷையைப் போல் இதற்குச் சாதகமான சாதனம் வேறில்லை. அந்தத் தாய்பாஷையை விட்டு அந்நியபாஷையில் பாடம் போதிப்பதால் பதத்துக்கும் பதார்த்தத்துக்கும் உள்ள சம்பந்தத்தையுணராது கிளிப்பிள்ளைபோல் வாத்தியார் சொல்லிக்கொடுத்ததை நெட்டுருப்போட்டு ஒப்பித்துப் பரீக்ஷை தேறவேண்டியதாயிருக்கிறது. இது வித்தியாபோதனை செய்யும் போதகர்க்காவது வித்தியாப்பியாசிகளாம் மாணாக்கர்களுக்காவது பெருமை விளைப்பதாயில்லை. நான்காவது வகுப்பில் வாசிக்கும் ஒரு பையனை இங்கிலீஷில் Angle (கோணம்) என்று சொல்கிற பதத்துக்கு அர்த்தமென்னவென்று கேட்டேன். வாத்தியார் சொல்லிக்கொடுத்தபடி பதில் சொல்லிவிட்டான். ஆனால் அதன் பொருள் அவன் மனதில் பட்டிருக்கிறதோவென்று உணர வேறுவிதமாகக் கோணத்

தைக் குறித்துக் காட்டச்சொல்ல ஒன்றும் தெரியாமல் விழித்தான். இப்படிப்பட்ட இங்கிலீஷ் படிப்பினுல் பிள்ளைகளின் பாலப்பருவம் வீணில் கழிவதன்றி அவர்கள் மனமும் நற்பயிற்சியின்றி களைமூடிப்பாழாகப் போகிறது. இதனுல் தேசத்துக்கு விளையும் தீங்கு சொல்லமுடியாது. இப்பொழுது இங்கிலீஷ் படித்துத் தேறினவர்களில் பெரும்பாலாருக்கு ஸ்வபாஷையில் தங்களினத்தாரோடு பேசவாவது தாங்கள் கற்றவித்தையை இங்கிலீஷ் தெரியாத சாமான்ய ஜனங்களுக்குத் தெரியச் சொல்லவாவது தெரியாது. இதனுல் தேசத்தின் யோக க்ஷேமத்துக்கு உண்டாகும் பாதகம் சொல்லிமுடியாது. இப்பொழுது சென்னைக்கு விஜயமாய் வந்திருக்கும் மிஸ்டர் எம். கே. காந்தியவர்கள் பாமரஜனங்களுக்காக அவர்களுடைய யோகக்ஷேமத்தையே பெரிதாக நினைத்து உழைத்துவந்ததால் இப்பொழுது இந்தியாவிற்கு வந்திருக்கும் அவர், ஜனசமூகத்தின் பிரமுகர்களோடு எல்லாம் (Leaders of Society all over India) போராடவேண்டியிருக்கிறது என்று சொன்னுர். ஏன்? சமஷ்டி சேவையின் மர்மமறிந்தவர்களுக்கு இதன் அர்த்தம் விளங்குவதுபோல் சாமான்யமாக "நானும் ஊருக்கழைக்கிறேன்" என்றுபேரும் கீர்த்தியும் பெறவேண்டுமென்று ஒப்புக்குழைப்பார் தமக்கு அதன் அர்த்தம் முற்றும் விளங்கமாட்டாது. பூர்வம்தொட்டு இவர்களையே ஒரு பெரியவர் "பெற்றதாயை விற்றடிமை கொள்ளுகின்ற பேதைகாள்!" என்று விளித்துக் கூறியிருக்கிருர்.

## GERMAN "FRIGHTFULNESS"
## ஜெர்மானியர் போடும் "பூச்சாண்டி" வேஷம்.

"விவேகசிந்தாமணி யுத்தகாண்டத்துக்கு" இங்கிலீஷில் முன்னுரை யெழுதியிருக்கிற மிஸ்டர் எச். ஓ. டி. ஹார்டிங் துரையவர்கள் German "Frightfulness" என்று நன்ருகப் பேரிடப்பட்ட அவர்களுடைய பூச்சாண்டி வேஷத்தின் உண்மையை உணராமல் நம்மவர்கள் இந்தியாவிலும் ஜெர்மனி இராஜ்யம் ஏற்படுத்த வந்துவிடுமென்று மனோராஜ்யம் செய்து வீண்பேச்சுப் பிதற்றி வருகிருர்கள் என்று சொல்கிருர். ஜெர்மனிபோடும் "பூச்சாண்டி" வேஷம் என்னவென்று முன்னுல் எடுத்துச் சொல்வது அவசியம். யுத்தம் என்று ஏற்பட்டால் அரசர்கள் தம் சைனியத்தைக் கொண்டு எதிரி சைனியபலத்தை முறியடித்து அதனுல் வெற்றி தோல்வி இன்னுர் பக்ஷம் என்று ஏற்படுத்திக் கொள்வார்கள். அப்படிக்கின்றி சைனியத்தில் சேராதகுடிகளைப் பயமுறுத்தவென்று ஆயுதம் தரித்த வீரர்கள் நிராயுதபாணிகளான குடிகளை ஹிம்ஸித்து பயமுறுத்துவது யுத்த தர்மத்தைச் சேர்ந்ததல்ல. இராக்கொள்ளை, பகற்கொள்ளையிடும் கூட்டக்காரர்கள் இப்படி ஜனங்கள் மனதில் பீதியையுண்டுபண்ணி ஜனங்கள் மனங் குழம்பியிருக்கும் சமயம்பார்த்து அகப்பட்டதைக் கொள்ளையிட்டுக்கொண்டு போவது வழக்கம். அந்த மாதிரி ஜெர்மானியர் யுத்தத்தில் சம்பந்தப்படாதவர்களைக் கொடுமையிழைத்து எங்கும் அவர்களிடத்தில் ஒருவித பீதியுண்டாக்கப் பார்க்கிருர்கள். இதன் முடிவுநோக்கம் என்னவென்ருல் சாமான்ய ஜனங்கள் தங்கள் கவர்ன்மெண்டாரிடத்திலிருக்கும் நம்பிக்கையை யிழந்துபோக